# அங்கங்களின் பயன்

வெளியீடு:

சொ. நா., காரைக்குடி.

ACC.No: 42258
79/2

தொகுப்பும் - உரையும்

ராய. சொ.

உ

சிவமயம்

# அங்கங்களின் பயன்







தொகுப்பும் - உரையும்

ராய. சொ.

காரைக்குடி, முத்துப்பட்டினம்

சொ. நாராயணன் மகள்

'கலைச் செல்வி' சரசுவதி

திருமண அன்பளிப்பு

துன்முகி ஐப்பசி - உ



# நூல் முகம்

அங்கங்களின் பயன் என்ற இத் தொகுப்பு நூல் நாற்பது பாக்கள் கொண்டது. இறையைத் தொழவே உடம்பும் அதன் உறுப்புக்களும் படைக்கப்பெற்றன என்ற கருத்து அமைந்த கவிகளே இங்கு இடம் பெறுகின்றன.

திருநாவுக்கரசு அடிகள் பாசுரங்கள் ஒன்பதும், பிறபெரியார் முப்பத்தொருவர் பாடல்கள் முப்பத்தொன்றும், இந்நூலை அணி செய்கின்றன. ஒவ்வொரு உறுப்பையும்பற்றி அப்பர் சுவாமிகள் பாடிய பாக்கள் முறையே எடுத்துக்கொள்ளப் பெற்றமையாலேயே அவை பெருகின.

உடம்பு பெற்றார் அனைவரும் அதன் பேற்றைப் பெறவேண்டும் என்ற சீரிய எண்ணத்தோடு, அரிய நண்பர் சொ. நாராயணனார் தமது மகள் கலைச் செல்வி சரசுவதியின் திருமண நினைவாக இதனை வழங்குகிறார். அன்பர் பயன் பெற்றுய்க.

துன்முகி–ஐப்பசி-உ ராய. சொ.

# அங்கங்களின் பயன்



## பொருள் அடக்கம்

20 தாய்படைத்துடைய —கம்பர்
21 கண்ட ஆனந்த —சேக்கிழார்
22 நீள் நாகம் சுற்றி—திருமங்கைஆழ்வார்
23 முந்தி —ஐயடிகள் காடவர்கோன்
24 வாழ்த்துகவாய் —திருமழிசை ஆழ்வார்
25 ஆலந்தான் —சுந்தரர்
26 வலிவணக்கு —குலசேகர ஆழ்வார்
27 வணங்கெனத்தலை —அதிவீரராமன்
28 மனத்தில் —தொண்டர் அடிப்பொடி
29 பாடாத நாவும் —சுவாமிநாத தேசிகர்
30 கேசவனையே —பிள்ளைப் பெருமாள்
31 ஈடும் எடுப்பும் —நம் ஆழ்வார்
32 கண்ணுவாரேனும் —தாயுமானுர்
33 அலையார்புனல் —சம்பந்தர்
34 படர்ந்து கானகம் —வில்லிப்புத்தூரர்
35 வாய் அவனை —பொய்கை ஆழ்வார்
36 புவியுள் நான் —பெரியாழ்வார்
37 கண் பனி —கருவூர்த்தேவர்
38 மாயனை —ஆண்டாள்
39 ஐயும் தொடர்ந்து —பட்டினத்தார்
40 கற்றவர் விழுங்கும் —சேந்தனுர்

——

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அங்கங்களின் பயன்

---

## க - திருவள்ளுவர்

கோள்இல் பொறியில்
குணம்இலவே, எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

கருத்து : தாம் கொள்ள வேண்டியவற்றை உணர்ந்துகொள்ளாத பொறிகளைப்போலப் பயனற்றனவாம், நிறை குணத்தினனான இறைவனுடைய திருவடிகளை வணங்காத தலைகள்.

அரும் சொல் பொருள் : கோள் இல் : கொள்ளுதல் இல்லாத. பொறி: மெய் வாய் கண் மூக்கு செவி என்ற ஐம்பொறி.

வணங்காத் தலையானது, பேசா வாய், காணாக் கண், கேளாச் செவி போலும் எனக் கொள்க.

வணங்கத் தலைவைத்து
வார்கழல்வாய் வாழ்த்தவைத்து

இணங்கத்தன் சீரடியார்
கூட்டமும்வைத்து எம்பெருமான்,

அணங்கொடு அணிதில்லை
அம்பலத்தே ஆடுகின்ற

குணங்கூரப் பாடிநாம்
பூவல்லி கொய்யாமோ.

கருத்து : தன்னுடைய நீண்ட திருவடிகளை வணங்கத் தலையைப் படைத்து, அந்த அடிகளை வாழ்த்த வாயைத் தந்து, ஒன்றுபடுதற்குத் தன் சிறந்த தொண்டர் குழுவை உண்டாக்கி, எம் தலைவனாகிய சிவபெருமான் சிவகாமவல்லியோடு அழகிய தில்லைச் சிற்றம்பலத்திலே கூத்தாடும் சிறப்பைப் பெரிதும் பாடி நாம் கொடியில் மலர் எடுப்போமாக.

அரும் சொல் பொருள் : வார் : நீண்ட. கழல் : திருவடி. அணங்கு: அம்பிகை. கூர: மிக.

## ௩ - அப்பர்

தலையே! நீவணங்காய் ;—தலை
மாலை தலைக்கு அணிந்து
தலையா லேபலி தேரும் தலைவனைத்
தலையே நீவணங்காய்!

கருத்து: தலையே! நீ கும்பிடுவாயாக; தலை மாலையைத் தலையிலே சூடிக்கொண்டு தலை ஓட்டிலே பிச்சைவாங்கும் சிவபெருமானாகிய தலைவனை, தலையே நீ வணங்குக.

அரும் சொல் பொருள்: பலி தேருதல்: பிச்சை ஏற்றல்.

## ௪ - அப்பர்

கண்காள்! காண்மின்களோ ;—கடல்
நஞ்சுண்ட கண்டன் தன்னை,
எண்தோள் வீசிநின்று ஆடும் பிரான் தன்னைக்
கண்காள் காண்மின்களோ!

கருத்து: கண்களே! காண்பீர்களாக; கடலில் எழுந்த நஞ்சை விழுங்கிய கழுத்தை யுடையவனாகிய, எட்டுத் தோள்களையும் விரித்து நின்று நடமாடும் தலைவனை, கண்களே பாருங்கள்.

## ரு - அப்பர்

செவிகாள்! கேள்மின்களோ ;—சிவன்
எம்இறை செம்பவள
எரிபோல்மேனிப்பிரான் திறம்எப்போதும்
செவிகாள் கேள்மின்களோ!

கருத்து: காதுகளே! கேளுங்கள்; நெருப்புப்போன்ற செம்பவள மேனியனுகிய எம் இறைவன் சிவனின் கீர்த்தியை எந்த நேரமும் கேளுங்கள்.

## சு - அப்பர்

மூக்கே! நீமுரலாய் ;—முது
காடுஉறை முக்கணனே
வாக்கே நோக்கிய மங்கை மணுளனே,
மூக்கே நீமுரலாய்!

கருத்து: மூக்கே! நீ முகர்வாயாக; பழைய காட்டிலே தங்கியிருக்கும் மூன்று கண் படைத்த கடவுளும், தன் வாயினின்றும் என்ன பணி வரும் என எதிர்பார்த்து நிற்கும் அம்பிகையின் கணவனும் ஆகிய அரனின் புகழ் மணத்தை, மூக்கே நீ உட்கொள்வாயாக.

## எ – அப்பர்

வாயே ! வாழ்த்துகண்டாய் ;—மத
யானை உரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத்து ஆடும்பி ரான்தன்னை
வாயே வாழ்த்து கண்டாய் !

கருத்து : வாயே! வாழ்த்துவாயாக; மத-யானையின் தோலை உடம்பிலே போர்த்துக் கொண்டு, பேய் வாழும் சுடுகாட்டினுள்ளே கூத்தாடும் தலைவனை, வாயே வாழ்த்துக.

அரும் சொல் பொருள் : உரி : தோல். கண்டாய் முன்னிலை அசை.

## அ – அப்பர்

கைகாள் ! கூப்பித் தொழீர்;—கடி
மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்புஅரை ஆர்த்த பரமனைக்
கைகாள் கூப்பித் தொழீர் !

கருத்து : கைகளே! சேர்ந்து வணங்குங்கள்; மணமுள்ள சிறந்த பூவைப்போட்டு நின்று, படம் கொண்ட பாம்பை இடுப்பில் கட்டிக் கொண்ட கடவுளை, கைகளே குவிந்து கும்பிடுங்கள்.

அரும் சொல் பொருள் : கடி : மணம். பை : பாம்புப்படம். அரை : இடை.

## ௯ - அப்பர்

காலக ளால்பயன்என் ?—கறைக்
கண்டன் உறைகோயில்
கோலக் கோபுரக் கோகர ணம்சூழாக்
கால்க ளால்பயன்என்?

கருத்து : கால்கள் பெற்றமையாலே அடையும் பயன் என்னே ? நஞ்சைக் கழுத்திலே கொண்ட சிவபெருமான் தங்கிய அழகிய கோபுரத்தையுடைய கோகர்ணக் கோயிலை வலம் வராக் கால்களால் என்ன பயன்?

அரும் சொல் பொருள்: கறை: நஞ்சு. கோகரணம், கோகர்ணம் என்னும் பம்பாய்ப் பகுதியிலுள்ள ஒரு தேவாரம்பெற்ற தலம்.

## ௧௦ - அப்பர்

ஆக்கை யால்பயன்என்? —அரன்
கோயில் வலம்வந்து
பூக்கை யால்அட்டிப் 'போற்றி' என் னுதஇவ்
ஆக்கை யால்பயன்என் ?

கருத்து : உடம்பு எடுத்ததன் பயன் என்ன ? சிவபெருமான் உறைகின்ற கோயில்களை வலமாகச் சுற்றிவந்து, கைகளால் மலர் தூவி, 'போற்றி! போற்றி' என்று சொல்லாத இந்த உடம்பினால் என்ன பயன் ?

வாழ்த்த வாயும்
நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும்
தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர்
தூவித் துதியாதே,
வீழ்த்த வா!வினை
யேன்நெடுங் காலமே.

கருத்து : தன்னை வாழ்த்துதற்கு வாயையும், நினைப்பதற்கு அறியாமையுடைய மனத்தையும், வணங்குதற்குத் தலையையும் தந்த சிவபெருமானாகிய தலைவனை, நிறைந்த உயர்ந்த பூக்களை இட்டு வணங்காமல் பாவியேன் நீண்ட நாட்களைவீணாக்கிவிட்டேனே.

அரும் சொல் பொருள் : சூழ்த்த, சூழ்ந்த என்பதன் விகாரம்; கூடிய என்பது பொருள்.

ஓத, வினை அகலும் ;
ஓங்கு புகழ்பெருகும் ;
காதல் பொருள்அனைத்தும்
கைகூடும் ;— சீதப்
பனிக்கோட்டு மால்வரைமேல்
பாரதப்போர் தீட்டும்
தனிக்கோட்டு வாரணத்தின் தாள்.

கருத்து: குளிர்ந்த பனி படியும் சிகரத்தையுடைய பெரிய மேருமலையின் மீது பாரதப் போரை எழுதும் ஒற்றைக் கொம்புள்ள யானைமுகக் கடவுளின் திருவடிப் பெருமையை, வாயினால் சொல்ல, வினை நீங்கும்; அதனாலே கீர்த்தியானது வளர்ந்து பெருகும்; அத் திருவடிப் புகழ்ச்சியால் விரும்பும் பொருள் எல்லாம் கிடைக்கும்.

அரும் சொல் பொருள்: காதல்: விருப்பம். சீதம்: குளிர்ச்சி. முதல்கோடு, சிகரம். இரண்டாவது கோடு, தந்தம். மால்: பெரிய. வாரணம்: யானை.

சீத என்பதை முதலாக எடுத்து முறையே பொருள் கொள்ளல் வேண்டும். இறுதியிலுள்ள தாள் என்பதோடு முதலிலுள்ள ஓத என்பதை இணைத்துப் பொருள்காண்பதால் இதற்குப் பூட்டுவிற் பொருள்கோள் என்று பெயர்.

மண்உலகம் ஆளேனே;
வானவர்க்கும் வானவனாய்
விண்உலகம் தன்அகத்தும்
மேவேனே;—நண்ணித்
திருமாலைச் செங்கண்
நெடியானை எங்கள்
பெருமானைக் கைதொழுத பின்.

கருத்து : திருமாலை, சிவந்த கண்களையுடைய நெடுமாலை, எங்கள் பெருமானை அடைந்து கைதொழுத பிறகு, மண்ணுலக ஆட்சி கிடைக்கினும் அதனை ஆளமாட்டேன், தேவர்க்கெல்லாம் தேவனாக இருந்து விண்ணுலகத்தை ஆளும் உரிமை கிடைக்கினும் அதனை ஏற்கமாட்டேன்.

சென்றநாள் செல்லாத;

செங்கண்மால் எங்கள்மால்

என்றநாள் எந்நாளும்

நாளாகும்;—என்றும்

இறவாத எந்தை

இணையடிக்கே ஆளாய்

மறவாது வாழ்த்துகஎன் வாய்.

கருத்து: செங்கண்மால் எங்கள் திருமால் என்று சொன்ன நாளெல்லாம் நாட்களாகும்; அவ்வாறு சொல்லாது சென்ற நாள் செல்லாத நாளே ஆகும். ஒருபோதும் சாவாத எம்தந்தையின் இரு திருவடிகட்கே ஆளாகி, அவனை மறவாது என்னுடைய வாய் வாழ்த்துவதாக.

'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்றார் அப்பர் சுவாமிகள்.

சிந்தனை செய்ய மனம்அமைத்
தேன்;செப்ப நாஅமைத்தேன் ;

வந்தனை செய்யத் தலைஅமைத்
தேன்;கை தொழஅமைத்தேன் ;

பந்தனை செய்வதற்கு அன்புஅமைத்
தேன்;மெய் அரும்பவைத்தேன் ;

வெந்தவெண் நீறுஅணி ஈசற்கு
இவையான் விதித்தனவே.

கருத்து: இறைவனை எண்ணுவதற்கு உள்ளம் பெற்றேன்; அவன் சீர் பேச நாவை அமைத்துக்கொண்டேன்; அப்பெருமானை வணங்கத் தலையை வைத்திருக்கிறேன்;அப்பரமனைத் தொழுதற்குக் கைகளை உடைத்தாயிருக்கின்றேன்; அக் கடவுளைக் கட்டுப்படுத்துவதற்கு அன்பு என்ற ஒன்று என்னிடம் இருக்கிறது; அச் சிவனை நினைந்து புளகாங்கிதம் அடைய உடம்பைப் பெற்றிருக்கிறேன் ; வெந்த வெண் திருநீறு பூசிய ஈசனுக்கு யான் நியமித்துக்கொண்ட முறை இவை.

கசு - இளங்கோ

மடம்தாழும் நெஞ்சத்துக்
கஞ்சனுர் வஞ்சம்
கடந்தானை, நூற்றுவர்பால்
நால்திசையும் போற்ற,
படர்ந்து,ஆ ரணம்முழங்கப்
பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத
நாஎன்ன நாவே!
'நாராய ணு' என்னு
நாஎன்ன நாவே!

கருத்து : அறியாமை தங்கிய உள்ளம்பெற்ற கஞ்சன் என்பவனின் வஞ்சகத்தினின்றும் விடுபட்டவனும், நூற்றுவரிடத்து நான்கு திக்கும் வணங்கவும் மறைகள் பரவி அலறவும் பாண்டவர்க்காகத் தூது சென்றவனும் ஆகிய கண்ணபிரானைப் பாராட்டாத நா என்ன நா; 'நாராயணு!' என்று சொல்லாத நாக்கு என்ன நாக்கு. அந்நாவினுல் ஒரு பயனும் இல்லை என்க.

அரும் சொல் பொருள் : மடம் : அறியாமை. தாழுதல் : தங்குதல். கஞ்சன் என்பவன் கண்ணனின் மாமன்.

கோடாத வேதனுக்கு யான்செய்த
குற்றம்என் ? குன்றெறிந்த

தாடாள னே! தென் தணிகைக்
குமர ! நின் தண்டைஅம்தாள்

சூடாத சென்னியும் நாடாத
கண்ணும் தொழாத,கையும்

பாடாத நாவும் எனக்கே
தெரிந்து படைத்தனனே.

கருத்து: நடு நீங்காத பிரமனுக்கு நான் என்ன பிழை இழைத்தேன்? மலையைப் பிளந்த பெருமை மிக்கவனே! தென் தணிகை மலைவாழும் முருகா! உன்னுடைய அழகிய தண்டைக் கால்களை வணங்காத தலையையும், பாராத கண்களையும், குவியாத கைகளையும், பாடாத நாவையும் எனக்கென்றே தேர்ந்தெடுத்து அப் பிரமன் ஏன் படைத்தனன்?

அரும் சொல் பொருள்: கோடாத: கோணல் இல்லாத. தாடாளன்: பெருமை மிக்கவன். தணிகை: திருத்தணி.

## கஅ - திருப்பாண் ஆழ்வார்

கொண்டல் வண்ணனைக்

கோவல னாய்வெண்ணெய்

உண்ட வாயன்என்

உள்ளம் கவர்ந்தானை,

அண்டர் கோன்அணி

அரங்கன்என் அமுதினைக்

கண்ட கண்கள்மற்று

ஒன்றினைக் காணாவே.

கருத்து : மேகம் போன்ற நிறத்தை உடையவனும், இடையனாக இருந்து வெண்ணெயுண்ட திருவாயையுடையவனும், என் உள்ளம் கவர்ந்த கள்வனும், தேவர்கள் தலைவனும், திருவரங்கநாதனும் ஆகிய என்னுடைய அமுதத்தைக் கண்ட கண்கள் வேறொரு பொருளைக் காணமாட்டா.

கக - காரைக்கால் அம்மையார்

கண்ணாரக் கண்டுமென்
கையாரக் கூப்பியும்
எண்ணார எண்ணத்தால்
எண்ணியும்—விண்ணோன்
எரியாடி என்றென்றும்
இன்புறுவன் கொல்லோ!
பெரியானைக் காணப் பெறின்.

கருத்து: பெரியோனாகிய சிவபெருமானைக் காணப்பெறுவேனானால் கண் குளிரக் காண்பேன்; கைநிறையக் கும்பிடுவேன்; எண் நிறைந்த உள்ளத்தால் நினைப்பேன்; அவனே தேவன் என்றும் அனல் ஆடி எனவும் சொல்லிச் சொல்லிமகிழ்வேன்.

௨௦ - கம்பர்

தாய், படைத் துடைய செல்வம்
ஈகெனத் தம்பிக்கு ஈந்து,

வேய்படைத் துடைய கானம்
விண்ணவர் தவத்தின் மேவி,

தோய்படைத் தொழிலால் யார்க்கும்
துயர்துடைத் தானை நோக்கி,

வாய்படைத் துடையார் எல்லாம்
வாழ்த்தினர் ; வணக்கம் செய்தார்.

கருத்து : தாயாகிய கைகேயி, தான்பெற்ற செல்வத்தைக் கொடு என்று சொல்ல, தம்பியாகிய பரதனுக்குத் தந்து, மூங்கில் அடர்ந்த காட்டுக்கு. தேவர் செய்த தவத்தின் காரணமாக ஏகி, பழகிய போர்த் தொழிலினலே அனைவருடைய துன்பத்தையும் போக்கியவனாகிய இராமபிரானைப் பார்த்து, யார் யார் வாயைப் பெற்றிருந்தாரோ அவரெல்லாரும் வாழ்த்தினர்கள்; வணங்கினர்கள். இராமனை வாழ்த்தாதார் வாய்பெற்றாராகார் என்க.

கண்ட ஆனந்தக் கடலினைக்
கண்களால் முகந்து
கொண்டு கைகுவித்து எதிர்விழுந்து
எழுந்துமெய் குலைய
அண்டர் முன்புநின்று ஆடினர்;
பாடினர்; அழுதார்.
தொண்ட னர்க்குஅங்கு நிகழ்ந்தன
யார்சொல வல்லார்?

கருத்து: தாம் கண்ட களிப்புக் கடலாகிய கடவுளைத் தமது கண்களாலே மொண்டு கொண்டு, கைசேர்த்து நேராக விழுந்து எழுந்து உடல் சிலிர்க்க, சிவபெருமான் திருமுன்னர் நின்று ஆடினர்; பாடினர்; அழுதார். அடியாரிடம் அப்பொழுது காணப் பட்ட மெய்ப்பாட்டின் திறத்தை யாரால் பேச முடியும்? எவராலும் முடியாது என்க.

தொண்டனர் இங்குத் திருநாவுக்கரசு அடிகள்.

## உஉ - திருமங்கை ஆழ்வார்

நீள்நாகம் சுற்றி
நெடுவரைநட்டு ஆழ்கடலைப்
பேணான் கடைந்துஅமுதம்
கொண்டுவந்த பெம்மானைப்
பூணார மார்வனைப்
புள்ஊரும் பொன்மலையைக்
காணாதார் கண்என்றும்
கண்அல்ல கண்டாமே.

கருத்து : கடலிலே பெரிய மலையை மத்தாக நட்டு, நீண்ட நாகத்தைக் கயிருகச் சுற்றி, ஆழமான கடலைப் பேணாது கடைந்து, அமுதம் கொண்டு மகிழ்ந்த பெருமானை, ஆபரணம் அணிந்த மார்பையுடையவனை, கருடனிலே ஏறிச் செலுத்துகின்ற தங்கமலை போன்றவனை, காணாதவர்களுடைய கண்கள் ஒருபோதும் கண்ணாகமாட்டா. இதனை நாம் கண்டோம்.

அரும் சொல் பொருள் : நாகம் : பாம்பு.

## உக - ஐயடிகள் காடவர்கோன்

குந்தி நடந்து
குனிந்துஒருகை கோல்ஊன்றி
நொந்துஇருமி ஏங்கி,
நுரைத்துஏறி—வந்துஉந்தி
ஐ, ஆறு வாய்ஆறு
பாயாமுன் நெஞ்சமே!
ஐயாறு வாயால் அழை.

கருத்து: இருந்து நடந்து கூனி ஒரு கையினாலே கம்பை ஊன்றிக் கொண்டு வருந்தி இருமி ஏக்கமுற்று, உடம்பிலுள்ள ஆறு வழியாகவும் நுரையும் கோழையும் மேலே ஏறியும் கீழே தள்ளியும் வந்து ஆறுகப் பாய்வதற்கு முன்னர், மனமே! ஐயாற்று அண்ணலை வாயினால் கூப்பிடு.

அரும் சொல் பொருள்: நுரைத்து: நுரையைக் கக்கி. உந்தி: தள்ளி. ஐ: கோழை. ஆறுவாய்: கண், காது, மூக்கு, வாய், நீர்த் துவாரம், மலத்தொளை ஆகிய ஆறு வழி. ஆறு பாயாமுன்: ஆறுகப் பெருகுதற்கு முன். ஐயாறு: திருவையாறு.

உச - திருமழிசை ஆழ்வார்

வாழ்த்துகவாய், காண்ககண்,
கேட்கசெவி, மகுடம்

தாழ்த்து வணங்குமின்கள்
தண்மலரால்;—சூழ்த்த

துழாய்மன்னு நீள்முடிஎன்
தொல்லைமால் தன்னை

வழாவண்கை கூப்பி மதித்து.

கருத்து: துழாய் மாலையால் சூழப்பட்ட, நிலை பெற்ற நீண்ட முடியுடைய என்னுடைய பழமையான திருமாலை, தவறுமல் வளமை மிக்க கையைக் குவித்துப் பாராட்டி, வாய் வாழ்த்துவதாக! கண்கள் காண்பனவாக! செவிகள் கேட்பனவாக! குளிர்ந்த பூக்களை அவன் திருவடியிலே இட்டு முடிசாய்த்து வணங்குவீர்களாக!

௨௫ - சுந்தரர்

ஆலம் தான்உகந்து அமுதுசெய் தானை,
  ஆதி யை, அம ரர்தொழுது ஏத்தும்
சீலம் தான்பெரி தும்உடை யானை,
  சிந்திப் பார்அவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாள்உமை நங்கை
  என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பன்எம் மானைக்
  காணக் கண்அடி யேன்பெற்ற வாறே.

கருத்து: நஞ்சை விரும்பி உண்டவனும், உலகத்துக்கு ஆதியும், விண்ணவர் போற்றி வணங்கும் ஒழுக்கநெறிமிக்கவனும், நினைப்பவர் உள்ளத்திருப்பவனும், மணமுள்ள நீண்ட கூந்தலையுடைய உமையவளால் என்றும் பரவித் துதிக்கப்பெற்றவனும், காலனுக்குக் காலனானவனும் ஆகிய ஏகம்பத்துறை எம்மானைக் காண்பதற்கே அடியேன் கண் பெற்றேன்.

அரும் சொல் பொருள்: ஆலம்: நஞ்சு. ஏலம்: மணம். கம்பன்: காஞ்சீவரத்திலுள்ள சிவபெருமான்.

## உக - குலசேகர ஆழ்வார்

வலிவணக்கு வரைநெடுந்தோள்
விராதைக் கொன்று,

வண்தமிழ்மா முனிகொடுத்த
வரிவில் வாங்கி,

கலைவணக்கு நோக்குஅரக்கி
மூக்கை நீக்கி,

கரனோடு தூடணன்தன்
உயிரை வாங்கி,

சிலைவணக்கி மான்மரிய
எய்தான் தன்னைத்

தில்லைநகர்த் திருச்சித்ர
கூடம் தன்னுள்

தலைவணக்கிக் கைகூப்பி
ஏத்த வல்லார்

திரிதலால் தவம்உடைத்துஇத்
தரணி தானே.

கருத்து: எதிரிகளின் பலத்தை வணங்க வைக்கின்ற மலை போன்ற தோள்களை யுடைய விராதனைக் கொன்று, வளமையான தமிழ் முனிவனான அகத்தியன் அளித்த வரிவில்லைப் பெற்று, கலைமானை வெல்கின்ற கண் பெற்று வந்த சூர்ப்பணகையின் மூக்கைப்போக்கி, கரதூடணர்கள் உயிரை அழித்து, வில்லை வளைத்து மாரீச மான் மடியுமாறு எய்தஇராமபிரானாகிய கோவிந்த ராஜப் பெருமாளைத் தில்லை நகரிலே திருச் சித்திர கூடத்திலே தலை வணங்கிக் கை கூப்பித் தொழவல்ல அடியார்கள் வாழ்வதா லேயேஇவ்வுலகம்தவம்உடையதாகின்றது.

கலைவணக்கு நோக்கு அரக்கி என்பதை மனத் திற் கொண்டேபோலும். "மானின் விழி பெற்றுமயில் வந்ததென வந்தாள்" என்று கூறுவர் கம்பர்.

அரும் சொல் பொருள்: விராது: விராதன், வரிவில்: சித்திரம் தீட்டப்பெற்ற வில்.

வணங்கெ னத்தலை அளித்தனை
நின்புகழ் வாழ்த்தென நாத்தந்தாய்;

இணங்கெ னத்திருக் கூட்டமும்
காட்டினை ; இனிப்பெறும் பேறுண்டோ !

துணங்கை இட்டுவெம் பேய்க்கணம்
குதித்திடச் சுடலைஆடு அரங்காகக்

கணங்கள் போற்றநின்று ஆடிய
அழகனே ! கருவைஎம் பெருமானே !

கருத்து : வணங்கு என எனக்குத் தலையைத் தந்தாய்; உன் புகழை வாழ்த்தச் சொல்லி நாவை நல்கினாய்; இணங்குதற்காக அடியார் திருக்கூட்டத்தை அளித்தாய்; இனி நான் பெறவேண்டிய பேறு என்ன இருக்கிறது? கொடிய பேய்க் கூட்டங்கள் துணங்கைக் கூத்தாடிக் குதிக்கச் சுடலையை ஆடும் மேடையாகக் கொண்டு பூத கணங்கள் போற்ற நின்று ஆடிய அழகனே ! கருவையில் வாழும் எம்பெருமானே!

துணங்கை என்பது கைகளை விலாவில் அடித்துக்கொண்டு ஆடும் ஒருவகைக் கூத்து. கருவை என்பது கரிவலம்வந்தநல்லூர்.

மனத்தில்ஓர் தூய்மை இல்லை ;
வாயில்ஓர் இன்சொல் இல்லை ;
சினத்தினால் செற்றம் நோக்கித்
தீவிளி விளிவன் வாளா ;
புனத்துழாய் மாலை யானே !
பொன்னிசூழ் திருவ ரங்கா !
எனக்குஇனிக் கதிஎன் சொல்லாய் ;
என்னைஆள் உடைய கோவே.

கருத்து : என்னுடைய உள்ளத்திலே ஒரு பரிசுத்தமும் இல்லை; என் வாயில் ஒரு நல்ல பேச்சும் வராது; கோபந்தான் எனக்குக் கண்ட பலன்; கோபத்தால் வெறித்துப் பார்த்து வீணாகக் கொடிய பேச்சுக்கள் பேசி இரைந்து கத்துவதே எனக்குத் தொழிலாகிவிட்டது; நந்தவனத்தில் தோன்றும் துழாய் மாலையை அணிந்தவனே! காவிரி சூழும் அரங்க நகரிலே துயின்றவனே! எனக்கு இனிமேல் கதிதானென்ன? சொல்லமாட்டாயா? என்னை அடிமை கொண்ட தலைவனே!

அரும் சொல் பொருள் : செற்றம் நோக்கி: வெறித்துப் பார்த்து. தீவிளி : கொடிய பேச்சு.

பாடாத நாவும் பணியாத
    சென்னியும் பாவித்துஅன்பாய்
நாடாத உள்ளமும் நான்படைத்
    தால், நரகு ஏழும்சென்று
கூடாது உயர்கதி கூடுவ
    னே? குன்று எறிந்தவைவேல்
சேடுஆர் மதில்செந்தி லாய்! என்கொ
    லோ! நின் திருவருளே.

கருத்து: மலையைப் பிளந்த கூரிய வேலைப் பிடித்த உயரமான மதில் உடைய திருச் செந்தூர் ஆண்டவனே! நின் திருவருள் எதுவோ? உன்னைப்பாடாத நாவும் வணங்காத தலையும் அன்போடு எண்ணித் துதியாத மனமும் நான் பெறுவேனானால், ஏழு நரகத்தையும் போய் அடையாமல் உயர்ந்த கதியை அடைவது எங்ஙனம்? உயர்கதி கூடுவதற்குஉன்னைப்பணியும் அங்கங்களே வேண்டும். அதற்கு அருள்க.

அரும் சொல் பொருள் சேடு: உயரம்.

## ௩௦ – பிள்ளைப் பெருமாள்

கேசவனை யேசெவிகள்
கேட்க ; திருவரங்கத்து
ஈசனையே சென்னி
இறைஞ்சிடுக ;—நேசமுடன்
கண்ணனையே காண்கஇரு
கண்;இணர்கொள் காயாம்பூ
வண்ணனையே வாழ்த்துகஎன் வாய்.

கருத்து : திருமாலின் பெயர்களையே என் காதுகள் கேட்பனவாக; திருவரங்கத்து இறைவனையே என் தலை வணங்குக; என் இரு கண்களும் அன்போடு அக்கண்ணனையேகாண்பனவாக;கொத்துக்கொத்தாகப் பூத்துத் தொங்கும் காயாம்பூ வண்ணனாகிய கடவுளையே என் வாய் வாழ்த்துவதாக.

அரும் சொல் பொருள்: இணர்: பூங்கொத்து.

## ௩௧ - நம் ஆழ்வார்

ஈடும் எடுப்பும்இல் ஈசன்
மாடு விடாதென் மனனே;
பாடும்என் நாஅவன் பாடல்;
ஆடும்என் அங்கம் அணங்கே.

கருத்து: சமமும் மேலும் இல்லாத இறைவனை விடாது என் உள்ளம். என் நா அவனைப் பற்றிய பாடலையே பாடும். என் உடல் அவனை நினைந்து தெய்வம் ஏறிய பெண்ணைப்போல் ஆடும்.

அரும் சொல் பொருள்: மாடு: பக்கம். அணங்கு: தெய்வப் பெண்.

## ௩௨ - தாயுமானர்

கண்ணாவா ரேனும்உனைக்
கைகுவியா ராயின்அந்த
மண்ணாவார் நட்பை
மதியேன் பராபரமே.

கருத்து: கண்ணை ஒத்த சிறப்புடை நண்பராயினும் உன்னைக் கை சேர்த்துக் கும்பிடாராஞல், அத்தகைய மண்ணாய்ப் போகின்றவர் உறவை விரும்பமாட்டேன், கடவுளே!

௩௩ - சம்பந்தர்

அலையார் புனல்சூடி
ஆகத்து ஒருபாகம்
மலையான் மகளோடு
மகிழ்ந்தான், உலகேத்தச்
சிலையால் எயில்எய்தான்
சிற்றம் பலம்தன்னைத்
தலையால் வணங்குவார்
தலையா னார்களே.

கருத்து: அலை சூழ்ந்த கங்கையைச் சடையிலே தரித்து உடம்பில் ஒரு பகுதியை மலையரசன் பாவைக்குக் கொடுத்துக் களிப்படைந்தவனும்உலகம் துதிக்குமாறு வில்லினால் உலகின் எதிரிகளின் கோட்டையை வென்றவனுமாகிய சிவபெருமான் கூத்தாடும் தில்லைச் சிற்றம்பலத்தைத் தலையினால் கும்பிடுகின்றவரே தலைமையான மக்கள் ஆவர்.

அரும் சொல் பொருள்: புனல்: நீர்; ஈண்டுக் கங்கை. எயில்: கோட்டைச் சுவர்; இங்கு முப்புர மதில்.

படர்ந்து கானகம்
திரிந்துமீண்டு அன்புடன்
பணிந்த பஞ்சவர்க் காகக்

கடந்த ஞானியர்
கடவுளர் காண்கலரக்
கழலி ணேசிவப் பேறத்

தொடர்ந்து நான்மறை
பின்செலப் பன்னக
துவசன் மா நகர்த் தூது

நடந்த நாயகன்
கருமுகில் வண்ணம்,என்
நயனம் விட்டக லாதே.

கருத்து: காடெல்லாம் அலேந்து திரிந்து திரும்பிவந்து அன்போடு தன்னே வணங்கிய பாண்டு மக்கள் ஐவரின்பொருட்டு,முதிர்ந்த அறிஞராலும் தேவராலும் காணமுடியாத இரு திருவடிகள் சிவக்கவும் நான்கு மறைகளும் தொடர்ந்து தன்பின் போகவும் பாம்புக் கொடியோனுகிய துரியோதனனுடைய அத்தினுபுரி என்னும் பேருருக்குத் தூதாக நடந்த பெருமானின் கரிய மேக நிறமானது, என் கண்ணே விட்டு நீங்கவே மாட்டாது.

௧௫ - பொய்கை ஆழ்வார்

வாய்அவனை அல்லது
வாழ்த்தாது; கைஉலகம்
தாயவனை அல்லது
தான்தொழா;—பேய்முலை நஞ்சு
ஊணாக உண்டான்
உருவொடு பேர்அல்லால்
காணாகண்; கேளா செவி.

கருத்து: உலகத்தைத் தாண்டியவனும், தாயாக வந்து பால் கொடுத்த பேயின் நச்சுப் பாலை ஊணாகக் குடித்தவனும் ஆகிய திருமாலின் திருஉருவத்தையும் திருப் பெயரையும் அல்லாத பிறவற்றை, என் வாய் வாழ்த்தாது; என் கைகள் தொழா; என் கண்கள் காணமாட்டா; என் செவிகள் கேட்க மாட்டா.

அரும் சொல் பொருள்: தாயவன்: தாவிய வன். பேய்: பூதகி.

புவியுள் நான் கண்டதோர்
அற்புதம் கேளீர்!

பூணி மேய்க்கும்இளம்
கோவலர் கூட்டத்து!

அவையுள் நா கத்தனை
யான்குழல் ஊத,

அமரலோ கத்தள
வும்சென்று இசைப்ப,

அவி உணு மறந்து
வானவர் எல்லாம்

ஆயர் பாடிநிறை
யப்புகுந்து ஈண்டி,

செவியுள் நா வின்சுவை
கொண்டு மகிழ்ந்து

கோவிந்த னைத்தொடர்ந்து
என்றும் விடாரே.

கருத்து : உலகிலே நான் கண்ட ஓர் அதிசயத்தைக் கேளுங்கள்; மாடு மேய்க்கும் இடைச் சிறுவர்கூட்டத்துள்ளே, பாம்பணையாளுகிய கண்ணன் வேய்ங்குழல் ஊத, அவ் ஓசையானது வான்உலகம்வரைப் போய் முழங்க, அதனைக் கேட்டுத் தேவரெல்லாரும் வேள்வி உண்டியை மறந்து இடையர் ஊர் நிறையும்படி போந்து நெருங்கி, காதுகளிலே கண்ணன் நாவோசைச் சுவைத்தேன் பாய்தலால் களித்து அக்கோவிந்தனை விடாது என்றும் பின் தொடர்ந்து திரிவார் ஆயினர்.

அரும் சொல் பொருள் : பூணி: மாடு.

இக்கருத்தைச் சேக்கிழார் அடிகள் ஆனய நாயனர் புராணத்திலே பின்வரும் பாட்டால் கூறுகிருர்.

"சுரமகளிர் கற்பகப்பூஞ்
சோலைகளின் மருங்குஇருந்து
கரமலரின் அமுதுஊட்டும்
கனிவாய்மென் கிள்ளையுடன்
விரவுநறும் குழல் அலைய
விமானங்கள் விரைந்தேறிப்
பரவியஏழு இசையமுதம்
செவிமடுத்துப் பருகினர்."

கண்பனி அரும்பக்
 கைகள்மொட் டித்துஎன்
  கஊகணே! 'ஓலம்'என்று ஓலிட்டு
என்பெலாம் உருகும்
 அன்பர்தம் கூட்டத்து
  என்னையும் புணர்ப்பவன் கோயில்,
பண்பல தெளிதேன்
 பாடிநின்று ஆடப்
  பனிமலர்ச் சோலைசூழ் மொழுப்பில்
செண்பகம் அரும்பும்
 பெரும்பற்றப் புலியூர்த்
  திருவளர் திருச்சிற்றம் பலமே.

கருத்து: கண்களில் நீர் வார கைகளைக் குவித்து, 'என் பற்றுக் கோடே அபயம்' என்று சொல்லி அலறி எலும்பு முழுதும் உருகுகின்ற அடியாரின் குழுவிலே அடியேனையும் சேர்ப்பவனின் கோயில் எது? அதுதான், இசை பல தெளிந்து வண்டுகள் பாடித் திரிந்து விளையாடும் குளிர்ந்த பூங்கா நெருங்கிய இடத்திலே செண்பகப் பூப் பூக்கும் தில்லை நகரிலே உள்ள திருவளரும் திருச்சிற்றம்பலம் என்னும் சிற்சபை.

மாயனை, மன்னும்
  வடமதுரை மைந்தனை,
தூய பெருநீர்
  யமுனைத் துறைவனை,
ஆயர் குலத்தினில்
  தோன்றும் அணிவிளக்கை,
தாயைக் குடல்விளக்கம்
  செய்ததா மோதரனை,
தூயோம்ஆய் வந்துநாம்
  தூமலர்கள் தூய்த்தொழுது
வாயினல் பாடி
  மனத்தினல் சிந்திக்க,
போய பிழையும்
  புகுதருவான் நின்றனவும்
தீயினில்தூசு ஆகும்;
  செப்பேல்ஓர் எம்பாவாய்.

கருத்து : மாயனை, நிலைபேறு உடைய வட மதுரையில் பிறந்த மைந்தனை, பரிசுத்த- மான நிறைநீரைப்பெற்ற யமுனை ஆற்றங்- கரையில் வளர்ந்தவனை, இடையர் குலத்தில் தோன்றிய அழகான விளக்குப் போன்ற வனை, பெற்ற தாயின் குடல் எங்கும் விளங் கித் தோன்றுமாறு செய்த தாமோதரனை, தூய உடலும் உள்ளமும் கொண்டு வந்து நல்ல பூக்களைத் தூவி வணங்கி, வாயினல் அம் மூர்த்தியின் புகழ் பேசி, மனத்தினல் அப் பெருமான் திறத்தை நினைப்போ மானல், முன்செய்த தவறுகளும் இனிச் செய்ய இருக்கும் பிழைகளும் நெருப்பில் இட்ட பஞ்சாக அழியும்; ஆதலால் அவன் புகழைப் பாடு, ஒப்பற்ற எமது பெண்ணே?

ஐயும் தொடர்ந்து விழியும்
செருகி அறிவுஅழிந்து
மெய்யும்பொய் ஆகி விடுகின்ற
போதொன்று வேண்டுவல்யான்;
செய்யும்; திருவொற்றி யூர்உடை
யீர்!திரு நீறும் இட்டுக்
கையும் தொழப்பண்ணி ஐந்தெழுத்து
ஓதவும் கற்பியுமே.

கருத்து : கோழை தொண்டையை அடைக்க, கண் நிலைக்குத்தி, அறிவு தடுமாறி உடம்பு பொய்யாகப் போகும் காலத்தை நோக்கி, நான் இப்போதே ஒன்று கேட்டு வைத்துக் கொள்ளுகிறேன்; அதனை அருள் செய்யும்; திருவொற்றியூர் ஆளும் கோவே! திருநீறு அணிந்து உம்மைக் கைதொழச் செய்து ஐந்து எழுத்தை அந்தச் சமயம் சொல்லிக் கொண்டிருக்க எனக்குப் படிப்பித்தல் வேண்டும்.

அரும் சொல் பொருள்: ஐ: கோழை. மெய்: உடல்.

"அப்போதைக்கு இப்போதே சொல்லிவைத்தேன்" என்ற பெரியாழ்வார் கருத்தைப் பின்பற்றியது இப் பா.

சஂ - சேந்தனர்

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை,
கரையிலாக் கருணைமா கடலை,

மற்றவர் அறியா மாணிக்க மலையை,
மதிப்பவர் மனமணி விளக்கை,

செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனை.
திருவீழி மிழலைவீற் றிருந்த

கொற்றவன் தன்னைக் கண்டுகண்டு உள்ளம்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே.

கருத்து: படித்தவர் உண்ணுகின்ற கற்பகப் பழத்தைப் போன்றவனும், கரையில்லாத கருணைப் பெருங்கடலானவனும், கல்லாத மற்றவரால் அறிய மாட்டாதமாணிக்க மலையாவானும், தன்னை மதிக்க வல்லார் மனத்துள்ளே மன்னிய மணி விளக்குப் போல்வானும் பகைவர் முப்புரங்களைத் தொலைத்த எமது சிவபெருமானும், திருவீழிமிழலை என்னும் தலம் குடிகொண்ட மன்னனுமாகிய கடவுளைப் பார்த்துப் பார்த்து என் உள்ளம் குளிர்ச்சி கொள்ள எனது கண்களும் குளிர்ந்துவிட்டன.

முற்றும்.

